30th January 1961]

**SRI V. SUBBIAH :** ஸார், வைப்பாறு நதியானது பெரும் பகுதி திருநெல்வேலியில் ஆரம்பித்து, கடலில் சங்கமம் ஆகி, அணைகள் இல்லாமல் தண்ணீர் வியர்த்தமாகப் போகிறது. பல இடங்களில் அணைகள் கட்டினால், கண்மாய்கள் நிறைந்து பல கிராமங் களுக்குச் சாகுபடிக்கு உதவும் என்பதால் அம்மாதிரிச் செய்யச் சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

**THE HON. SRI P. KAKKAN :** அரசாங்கத்திற்கு அப்பேர்ப்பட்ட உத்தேசம் இருக்கிறது ; ஏற்கெனவே பல அணைகள் கட்டப்பட் டிருக்கின்றன. புதிதாகக் கட்டுவது பற்றியெல்லாம் பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது.

**SRI S. RAMASAMI NAIDU :** வைப்பாறு மலையடிவாரத்தில் ஆரம்பிப்பதிலிருந்து 10, 12 அணைகள் இருக்கின்றன என்று கனம் அங்கத்தினர் ஞாபகத்திற்குக் கொண்டு வரவேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

MR. SPEAKER : The hon. Member is making only a suggestion.

*Musical instruments (sales-tax)*

*** 277 Q.—SRI A. VEDARATHNAM :** கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இசைக் கருவிகள் மீதுள்ள விற்பனைவரி பற்றி தஞ்சை வீணை, தம்புரா செய்துவரும் தொழிலாளர்களிடமிருந்து ஏதேனும் கோரிக்கை வந்திருக்கிறதா ? அதன் விவரம் என்ன ?

(இ) அப்படியானால், அதன்பேரில் அரசாங்கம் எடுத்துக் கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) Yes, Sir.

It was represented that the levy of tax at 6 per cent single point under the Madras General Sales Tax Act, 1959 on musical instruments produced by them caused much hardship to the industry and it was accordingly requested that Tanjore Veenas and Tampuras might be exempted from sales tax.

(b) The Government have reduced the rate of single point tax payable under the Madras General Sales Tax Act, 1959, on the sales of musical instruments in this State from 6 per cent to 4 per cent with effect on and from the 1st December 1960.

**SRI A. VEDARATHNAM :** இந்த இசைக் கருவிகள் இந்த மாகாணத்தில் வேறு எங்காவது உற்பத்தி செய்யப்படு கின்றனவா ? வரி எவ்வளவு ? மிகக் குறைவான தொகையே வருவதனால், இந்தத் தொழிலை வளர்க்கும் நோக்கத்தோடு, இந்த வரியை நீக்க அரசாங்கம் முன்வருமா ?

[30th January 1961

THE HON. SRI R. VENKATARAMAN : வீணை, தம்புராவிற்கு மாத்திரம் நீக்கினால், மற்ற இசைக் கருவிகள் செய்கிற வர்களும் தங்களுக்கும் அம்மாதிரியே நீக்க வேண்டும் என்று கேட்பார்கள். அப்பொழுது அதிகமாகப் பணம் நஷ்டமாகிவிடும். அதனால்தான் வரியை 6 சதவிகிதத்திலிருந்து 4 சதவிகிதத்திற்கு குறைத்திருக்கிறது.

*Weavers (houses)*

*278 Q.—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(a) whether there are any renovation schemes for the existing houses of Weavers;

(b) The names of districts in which this scheme is introduced; and

(c) Whether there is any proposal to introduce this scheme in the Kanyakumari district?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) Yes, Sir.

(b) In Salem and Tirunelveli districts.

(c) No, Sir.

SRI T. T. DANIEL : May I know, Sir, whether the scheme benefits only the weavers who are members of the Co-operative Society and also may I know whther the total amount that is set apart for the scheme and the number of houses the Government intend to renovate?

THE HON. SRI R. VENKATARAMAN : இது கூட்டுறவு சங்கங் களில் சேர்ந்திருப்பவர்களுக்குத்தான் கொடுக்கப்படுகிறது. மேலப்பாளையத்தில் ரூ. 39,000 ஒதுக்கியிருந்தோம்; எவ்வளவு வீடுகள் ரிப்பேர் செய்யப்பட்டது என்ற புள்ளி விவரம் இப்பொழுது என்னிடம் இல்லை. சேலத்தில் ரூ. 38,000 ஒதுக்கி யிருந்தோம்; 31 வீடுகள் ரிப்பேர் செய்யப்பட்டிருக்கிறது.

SRI T. T. DANIEL : May I know, Sir how much amount is spent for renovating each house and may I also know whether any proposals were sent by the Weavers Co-operative Society in Kanyakumari district?

THE HON. SRI R. VENKATARAMAN : We have no proposal from Kanyakumari district. I have information about Melapalayam and it is forty houses.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : இந்த வீடு கட்டும் திட்டம் சொசைடிகளில் சேர்ந்தவர்களுக்கு மட்டுந்தான் உதவி யளிக்கிறது. தனிப்பட்ட நெசவாளர்களுக்கு உபயோகமாகப்